

# Tamil Americans United
## Political Action Committee

P.O. Box 33494 | Raleigh | NC 27636 | USA
info@tamilamericansunited.com | (+1) 919-230-4279

---

ஒருங்கிணைந்த தமிழ் அமெரிக்கர்கள் அரசியல் நடவடிக்கை குழு

கௌரவ தமிழக முதல்வர்
திரு.மு.க.ஸ்டாலின்
21-08-2021

மாண்புமிகு தமிழக முதல்வர் ஸ்டாலின் அவர்களுக்கு

திருச்சி சிறப்பு முகாமில் அடைத்து வைக்கப்பட்டிருக்கும் ஈழத்தமிழ் அகதிகளின் விடுதலைக்கான விண்ணப்பம்

மதிப்பிற்குரிய முதல்வர் ஐயா,

திருச்சி சிறப்பு முகாமில் அடைத்து வைக்கப்பட்டிருக்கும் ஈழத்தமிழ் அகதிகள் தங்களை விடுவிக்க கோரி கடந்த 15 நாட்களுக்கும் மேலாக உண்ணாவிரதம் இருந்து வருவதாகவும் இதுகுறித்து எந்த ஒரு அதிகாரியும் சென்று பார்வையிட்டு உரிய பதில் அளிக்காமையினால்; விரக்தியுற்ற சிலர் அளவுக்கதிகமான தூக்க மாத்திரைகளை உண்டும், ஒருவர் வயிற்றைக் கிழித்தும்., இன்னொருவர் கழுத்தை அறுத்தும், இருவர் தூக்கிலிட்டு கொண்டும் தற்கொலை செய்ய முயற்சி செய்திருப்பதாகவும் அறிகிறோம்.

கடந்த ஒரு மாதத்திற்கு முன்பு, கடுமையான போராட்டத்தை அவர்கள் முன்னெடுத்த நிலையில், சென்னையில் இருந்து சென்ற அகதிகள் மறுவாழ்வுத் துறை ஆணையர் அவர்கள் நேரடியாக திருச்சிக்கு சென்று வழங்கிய உறுதிமொழி இன்னமும் அமல்படுத்தப்படாத காரணத்தினாலும் இவ்வாறு பலமுறை ஏமாற்றப்பட்ட நிலையிலும், மன உளைச்சலில் , வேதனையிலும் விரக்தியின் விளிம்புக்கு சென்ற அவர்கள் இந்த தற்கொலை முயற்சியை மேற்கொண்டார்கள் என்பதைத் தங்களின் மேலான கவனத்திற்கு கொண்டு வருகிறோம்.

எனவே கடவுச்சீட்டு வழக்கு மற்றும் வேறு சில தவறுகளுக்காகவும் தண்டனைக் காலத்தைத் தாண்டியும் நீண்ட பல வருடங்களாக திருச்சி சிறப்பு முகாமில் அடைபட்டு சிறையிருக்கும் ஈழதமிழ் அகதிகள் மீது கருணை காட்டி அவர்களை விடுதலை செய்வதற்கு உரிய நடவடிக்கை மேற்கொள்ளுமாறு தங்களை ஒருங்கிணைந்த தமிழ் அமெரிக்கர்கள் அரசியல் நடவடிக்கை குழு சார்பாக தயவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

நன்றி

இவ்வண்ணம்

மீனா இளஞ்செயன்

...................................
(மீனா இளஞ்செயன், 08/21/2021)
தலைவர்
ஒருங்கிணைந்த தமிழ் அமெரிக்கர்கள் அரசியல் நடவடிக்கை குழு